110

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் / Department of Examinations, Sri Lanka

**இலங்கை அரசாங்கத்தின் நூலகர் சேவையில் வகுப்பு III இற்கு ஆட்சேர்ப்புச் செய்வதற்கான - திறந்த போட்டிப் பரீட்சை - 2013 (2014)**

Open Competitive Examination for Recruitment to Class III of Sri Lanka Government Librarians' Service - 2013 (2014)

**(01) நூலகவியல்**
Library Science

மூன்று மணித்தியாலங்கள்
Three hours

**ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

---

1. (i) "ஒரு விசேட நூலகத்தின் சேவையானது விசேட வாசகர் குழுவிற்கு மட்டுப்படுத்தப்பட்டுள்ளது," விளக்குக. (10 புள்ளிகள்)

   (ii) ஓர் ஆய்வு நூலகத்திலிருந்து (Research Library) ஆய்வாளர்களுக்குக் கிடைக்கத்தக்க **ஐந்து** முக்கிய சேவைகளைக் குறிப்பிட்டு, அவற்றைப் பற்றி ஒரு சுருக்கமான பகுப்பாய்வை முன்வைக்க. (10 புள்ளிகள்)

2. (i) நூலகப் பொருள்களின் பாதுகாப்பையும் காப்பையும் கருதும்போது நூலகக் கட்டடத்திற்காக நிலத்தைத் தெரிந்தெடுத்தல் தொடக்கம் கட்டடத்தை அமைத்தல் வரையுள்ள செயல்களில் கவனஞ் செலுத்த வேண்டிய விடயங்கள் பற்றி ஒரு சுருக்கமான விவரணத்தை முன்வைக்க. (10 புள்ளிகள்)

   (ii) ஒரு நூலகக் கட்டடத்தின் உள்ளகத்தைத் திட்டமிடும்போது கருத்தில் கொள்ள வேண்டிய அடிப்படை விடயங்களை விளக்குக. (10 புள்ளிகள்)

3. (i) ஒரு நூலகத்தில், அறிவை வகைப்படுத்தும் முறை ஒன்றைப் பயன்படுத்துவதால் பெறப்படும் பயன்களை விளக்குக. (10 புள்ளிகள்)

   (ii) அறிவை வகைப்படுத்தும்போது தூயி தசம வகையீட்டு முறை எவ்வளவு தூரத்திற்குப் பயனுறுதி வாய்ந்தது என்பதைப் பகுப்பாய்வு செய்க. (10 புள்ளிகள்)

4. (i) சேகரிப்பு அபிவிருத்தி (Collection development) என்பதை ஒரு வரைவிலக்கணத்தைக் கொண்டு பகுப்பாய்வு செய்க. (10 புள்ளிகள்)

   (ii) ஒரு முறையான நூலக வளச் சேகரிப்பை உருவாக்குவதற்கு 'ஒரு சேகரிப்பு அபிவிருத்திக் கொள்கையின்' முக்கியத்துவம் பற்றி ஆராய்க. (10 புள்ளிகள்)

5. (i) ஒரு நூலகத்திற்கும் ஒரு வெகுசன ஊடகத்திற்குமிடையே உள்ள வேறுபாட்டை விளக்குக. (05 புள்ளிகள்)

   (ii) ஒரு நூலகத்திற்குத் தொடர்பாடலின் முக்கியத்துவம் பற்றிச் சுருக்கமாக ஆராய்க. (05 புள்ளிகள்)

   (iii) ஒரு தொடர்பாடல் முறைமையின் முக்கிய கூறுகள் பற்றிச் சுருக்கமாக அறிமுகஞ் செய்க. (10 புள்ளிகள்)

6. (i) நூலகத் தன்னியக்கவாக்கம் (Library Automation) என்பதால் கருதப்படுவதனை விளக்குக. (10 புள்ளிகள்)

   (ii) நூலகங்களில் சேவைகளை நடத்தும்போது கணினித் தொழினுட்பத்தின் மூலம் கிடைக்கும் உதவி எத்தகையது? விமர்சிக்க. (10 புள்ளிகள்)

7. பின்வருவனவற்றில் நான்கைப் பற்றிச் சுருக்கக் குறிப்புகள் எழுதுக.

   (i) பதிப்புரிமைச் சட்டம் (Copyright Law)

   (ii) நூலகப் பொருள்களில் வேண்டாதவற்றை களைதல் (Weeding)

   (iii) இலங்கை நூலகச் சங்கம்

   (iv) நூலக ஆலோசனைக் குழு

   (v) வாசகர் கல்வி

   (04 × 5 = 20 புள்ளிகள்)

***